# பகவத் பாதை தமிழ் மாத இதழ்

"ஒரு காலத்தில் இந்தியா என்று எந்த நாடுமே கிடையாது. குட்டி குட்டி நாடுகள்தான் பல இருந்தன. அவை ஒன்றுக்கொன்று போர்களில்தான் ஈடுபட்டு வந்தன. எல்லா சிறிய நாடுகளும் சேர்ந்து இந்தியா என்ற பெயரில் ஒன்றாகிய போது எல்லா ராணுவமும் இந்திய ராணுவமாகிவிட்டது. இப்போது எல்லா நாடுகளுமே உலகப் பொது அமைப்பின் அங்கமாக அங்கீகரிக்கப்பட்டு விட்டன. அந்நிலையில் வன்முறையாளர்களின் வன்முறைகளை கட்டுக்குள் கொண்டுவர வேண்டிய கடமையும் உரிமையும் எந்த ஒரு தனிப்பட்ட நாட்டுக்கும் இல்லாமல் போய்விடும். அந்த விதமான கடமையும் உரிமையும் சர்வதேச கூட்டமைப்பான ஐ.நா. சபை அல்லது அது போன்ற ஏதாவது ஓர் அமைப்புக்கு சென்றுவிடும். ஆக்கப்பணிகளை உள்நாட்டு ராணுத்திடமும் அடக்குமுறை பணிகளை சர்வதேச ராணுவத்திடமும் ஒப்படைப்பதுதான் நமது நாகரிகத்தின் அடுத்த கட்ட வளர்ச்சியாகும்.

– ஸ்ரீ பகவத்

கோடையில் இயற்கை சூழல் மிகுந்த ஏற்காடு மலைப் பிரதேசத்தில் 5 நாள்

## சிறப்பு ஞானமுகாம்

வழங்குபவர் : **ஸ்ரீ பகவத் ஐயா** அவர்கள்

இடம் : House of Peace (Glass House) அமைதி இல்லம், ஏற்காடு.
நாள் : 1-5-2019 புதன்கிழமை மாலை 4 மணி முதல்
5-5-2019 ஞாயிறு மாலை 3.00 மணி வரை

### தலைப்புகள் :

1. ஞானப்புரிதல்
2. அகம்-புறம்
3. நான் யார்?
4. நினைவும் சிந்தித்தலும்
5. மனோலயம் - மனோ நாசம்
6. கர்மவினை
7. தெளிவில் உறுதி



- இது கோடை காலத்திற்கு ஏற்ற சுற்றுலா தலமாக அமைந்திருப்பதால் குடும்பத்துடன் பங்கு பெறலாம்.
- ஆண்களுக்கும், பெண்களுக்கும் தங்குவதற்கான தனித்தனி இடவசதி உள்ளது. ஒவ்வொருவருக்கும் தனித்தனி படுக்கை வசதி உள்ளது. தனி அறைகள் 10 மட்டும் உள்ளதால் குடும்பத்துடன் வருபவர்களுக்கு மட்டும் தனி அறை கொடுக்கப்படும்.
- உணவு மற்றும் தங்கும் இடவசதிக்கான செலவு பகிர்வு தலா ஒருவருக்கு ரூ. 6000/- மட்டுமே.
- 90 நபர்கள் மட்டுமே தங்க இடமிருப்பதால் பங்கேற்க விரும்புபவர்கள் ஏப்ரல் 15ம் தேதிக்குள் முன்பதிவு செய்திட வேண்டுகிறோம்.

**முன்பதிவு செய்யும் வழிகள் :**

**M.O, D.D. (or) Cheque :** வரைவோலை அனுப்புபவர்கள் : A/c. Sri Bagavath Mission என்ற பெயரில் சேலத்தில் செல்லத்தக்கதாக அனுப்புமாறு கேட்டுக்கொள்கிறோம்.

**Direct Payment :** நேரடியாக வங்கியில் செலுத்துபவர்கள் : Sri Bagavath Mission, HDFC A/c No. : 15907620000075 NEFT IFSC : HDFC 0001590 என்ற வங்கிக் கணக்கில் செலுத்தி தெரியப்படுத்தவும்.

**Online Payment :** Credit Card or Debit Card மூலம் www.sribagavathmission.org என்ற வெப்சைட்டிலும் முன்பதிவு செய்யலாம்.

**ஸ்ரீ பகவத் மிஷன்**
31, இராமலிங்கசாமி தெரு, அம்மாப்பேட்டை, சேலம்-3.
கைப்பேசி : **9994205880, 97891 65555**

## உள்ளே



கூடுதல் தகவல்களைப் பெற விரும்புகிறீர்களா? (அ) பாதையை நண்பர்களுக்கு அனுப்ப விரும்புகிறீர்களா?





Sri Bagavath Mission
31, Ramalingasamy Street, Ammapet,
Salem - 636 003. Tamilnadu India

V.A.P. SHARAVANAN - 99942 05880
Dr. N. KAILASAM - 94432 90559
K.S. JEEVAMANI - 97891 65555
www.sribagavathmission.org
www.sribagavath.org
E-mail : sribagavathmission@gmail.com



This book Designed by
SRI ESPARI GRAPHICS, Salem-3.
Cell : 90926 46260, 98651 34075



# போர் புரிவது எவ்வாறு?

- ஸ்ரீ பகவத்

போர் புரிய வேண்டியது அவசியமா?

அதற்கு அவசியம் இருப்பதால் தான் போர் நிகழ்ந்து கொண்டிருக்கிறது.

இப்போதும் உலகத்தின் ஏதாவது ஒரு மூலையில் போர் நடந்து கொண்டுதான் இருக்கிறது.

நமது நாட்டிலும் அதற்கான சூழ்நிலை உருவான காரணத்தினால்தான் அதுபற்றி நாம் சிந்திக்க வேண்டியதாக இருக்கிறது.

இவற்றை நாம் ஆய்வுக்கு எடுத்துக் கொள்வதற்கு முன்பு அவற்றோடு தொடர்பு கொண்ட ஆன்மிகம் மற்றும் தார்மிகம் என்ற இரண்டு அம்சங்களை ஆய்வுக்கு எடுத்துக் கொள்வது அவசியம்.

ஆன்மிகம் என்றால் என்ன?

தார்மிகம் என்றால் என்ன?

இரண்டுக்கும் உள்ள தொடர்பு என்ன?

ஒருவருடைய மன இயக்கம் எப்படி இருக்கிறது? அது எவ்வாறு இயங்குகிறது? அது எப்படி இயங்குவது சரியானது? அது எப்படி இயங்குவது தவறானது? அது எப்படி இயங்க வேண்டும்? அது எப்படி இயங்கக் கூடாது?

- இப்படி நம் மனம் சம்பந்தப்பட்ட அக இயக்கம் பற்றி முறையாக விவரிப்பதுதான் ஆன்மிகம்.

நமது புறச் செயல்கள் எப்படி அமைய வேண்டும்? ஒருவருக்கொருவர் எவ்வாறு நடந்து கொள்ள வேண்டும்? எவ்வாறு நடந்து கொள்ளக் கூடாது? எப்படி நடந்து கொள்வது தர்மம்? எப்படி நடந்து கொள்வது அதர்மம்?

- இப்படி நமது புறச் செயல்கள் அனைத்தையும் வகைப்படுத்தி அவற்றுள் நாம் கடைபிடிக்க வேண்டிய தர்மம் என்ன என்பதை விவரிப்பதுதான் தார்மிகம் என்பதாகும்.

தனி மனிதன் பின்பற்ற வேண்டியது ஆன்மிகம். ஒரு சமுதாயம் பின்பற்ற வேண்டியது தார்மிகம்.

ஆன்மாவின் வழியில் செல்வது ஆன்மிகம். தர்மத்தின் வழியில் செல்வது தார்மிகம்.

ஆன்மா என்பது சுதந்திரமான ஒன்றை குறிப்பது. அனைத்தையும் இறைவனிடம் ஒப்படைப்பதன் மூலம் ஆன்மா சுதந்திரமடைந்து விடுகிறது.

அனைத்தையும் இறைவனிடம் ஒப்படைப்பது என்பது,

அகம்-மனம் சம்பந்தப்பட்ட அனைத்தையும் இறைவனிடம் ஒப்படைப்பது ஆகும்.

தர்மம் என்பது ஓர் ஒழுங்கு; ஒரு நெறிமுறை; ஒரு கட்டுப்பாடு.

தாறுமாறாகக் கிடப்பவற்றை வகைப்படுத்தி, நெறிப்படுத்துவது தான் தர்மம்.

சுதந்திரம் வேறு; கட்டுப்பாடு வேறு.

அகத்தைப் பொருத்த அளவில் சுதந்திரம் - சரணாகதி.

புறத்தைப் பொருத்த அளவில் கட்டுப்பாடு - நிர்வாகம்.

அகத்தைப் பொருத்த அளவில் சுதந்திரமான கள்ளங்கபடமற்ற ஒரு குழந்தை உள்ளமாக அது விவரிக்கப்படுகிறது. அதுதான் ஆன்மிகம்.

புறத்தை பொருத்த அளவில் அறிவு பூர்வமான கட்டுப்பாடாக, நெறிமுறையாக அது விவரிக்கப்படுகிறது. அதுதான் தார்மிகம்.

ஒவ்வொரு மதமும் இந்த ஆன்மிகத்தையும் போதிக்கிறது. தார்மிகத்தையும் போதிக்கிறது.

ஒவ்வொரு மதத்திலும் இந்த இரண்டு அம்சங்களும் சேர்ந்தே காணப்படுகின்றன.

இது ஒரு கள்ளங்கபடமற்ற குழந்தையும், அறிவுத் திறம் மிக்க ஒரு தந்தையும் சேர்ந்திருப்பது போன்றதாகும்.

இதுதான் ஒரு மதத்தின் இலக்கணம்.

ஒரு மதத்தின் முற்பகுதி ஆன்மிகம்; இரண்டாவது பகுதி தார்மிகம்.

இந்த முற்பகுதி அனைத்து மதங்களுக்கும் பொதுவானது.

நமது மன இயக்கத்தை அப்படியே ஏற்றுக்கொள்வது அல்லது இறைவனிடம் சமர்ப்பிப்பது மட்டுமே இந்த முற்பகுதி.

இதன் மூலம் நமது மன இயக்கம் முழுவதும் கள்ளங்கபடமற்றச் சுதந்திரம் அடைந்து விடுகின்றது.

ஆனால் இரண்டாவது பகுதியான தார்மிகம் என்பது அடிப்படையில் ஒன்றாக இருந்தாலும் செயல்பாட்டுக்கு வரும்போது

மதங்களுக்கிடையே வேறுபாடு உள்ளது போன்ற

தோற்றத்தை உருவாக்கி விடுகின்றது.

ஆன்மிகத்தைப் பொருத்த அளவில் மனதின் சுதந்திரமே முக்கியமானது.

அதற்கு முக்கியத்துவம் அளித்துப் புரிந்து கொள்வதானது அனைவரும் பயனடையும் வகையில் எளிமையானதாகும்.

இரண்டாவது அம்சமான தார்மிகத்தில் இரண்டு தன்மைகள் உள்ளன.

அதன் முதற்பகுதி மனதின் சுதந்திரத்துக்கு உதவி செய்வதாக அமைந்துள்ளது. அதன் இரண்டாவது பகுதி நமது சமுதாய வாழ்வை நெறிப்படுத்துவதாக அமைந்துள்ளது.

இந்தத் தார்மிகத்தைப் பொருத்த அளவில் மதங்களுக்கிடையே வேறு வேறான அணுகுமுறைகள் உள்ளன.

மக்களின் நாகரீக வளர்ச்சிக்கேற்ற வகையில் இந்தத் தார்மிகத்தின் செயல்முறைகளில் வேறுபாடுகள் இருக்கத்தான் செய்யும்.

ஒருமுறை ஜே. கிருஷ்ணமூர்த்தி இந்தியாவுக்கு வருகை தரும்போது நிருபர்கள் அவரைப் பேட்டி கண்டார்கள்.

அப்போதுதான் அனைத்து ஜாதியினரும் ஆலயப் பிரவேசம் செய்யலாம் என்ற அணுகுமுறை நடைமுறைக்கு வந்தது.

"அனைத்து ஜாதியினரும் கோயிலுக்குள் அனுமதிக்கப்படுவது பற்றி உங்களுடைய கருத்து என்ன?" என அவரிடம் கேட்டார்கள்.

"There should be no temple கோயிலே இருக்கக்கூடாது" என்று ஒரே வரியில் அவர் கூறிவிட்டார்.

அப்படி என்றால்?

அவர் நாத்திகவாதியா?

நாகரீகத்தின் வளர்ச்சிக்கேற்ப ஆன்மிகத்திலும் மேம்பட்ட வளர்ச்சி தேவைப்படுகிறது.

அறிவியல் வளர்ச்சி ஆன்மிகத்திலும் தேவைப்படுகிறது.

நாகரிகம் வளர்ச்சியடையாத காலங்களில் மதத்தின் பெயரால் வன்முறைகள் ஏற்பட்டிருக்கலாம்.

மதத்தின் பெயரால் ஆயிரம் சமணர்களைக் கழுவேற்றிக் கொன்றிருக்கலாம். அறிவியல் வளர்ச்சி அடைந்த இக்காலத்திலும் மதத்தின் பெயரால் வன்முறைகள் ஏற்படுவதென்பது அறிவுக்குப் பொருத்தமானதன்று.

ஆனாலும்கூட மதத்தின் பெயரால் வன்முறையாளர்கள் உருவாகிய வண்ணந்தான் இருக்கிறார்கள். அவர்கள் வன்முறைகளில் ஈடுபட்டுக் கொண்டுதான் இருக்கிறார்கள்.

அவர்கள் எந்த நாட்டிலிருந்துகொண்டு செயல்பட்டுக் கொண்டிருக்கிறார்களோ

அவர்களை அடக்குவது யார்?

அவர்களைக் கட்டுப்பாட்டுக்குள் கொண்டு வரவேண்டியது யார்?

அந்த வன்முறையாளர்கள் முகாமிட்டிருக்கும் நாட்டின் அரசாங்கமா?

அல்லது அந்த வன்முறையாளர்களால் பாதிக்கப்பட்ட பக்கத்து நாட்டைச் சேர்ந்த அரசாங்கமா?

அந்த வன்முறையாளர்களைக் கட்டுப்படுத்த வேண்டிய கடமை இந்த இரண்டு நாட்டு அரசாங்கங்களுக்குமே உண்டு.

நான் எனக்குச் சொந்த ஊர் கிராமத்தில் வசித்தபோது ஏற்பட்ட ஒரு சம்பவம்.

எங்கள் வீடு ஒரு பெரிய தோட்டத்தின் மத்தியில் அமைந்திருந்தது.

வீட்டைச் சுற்றிய எங்கள் தோட்டத்தில் வெட்ட வெளியான காலி இடமும் உண்டு. பலவிதமான மரங்களும் உண்டு.

தோட்டத்தைச் சுற்றி முள்மரக் கிளைகளைக் கொண்டு வேலி அமைத்து வைத்திருப்போம். வேலிக்கு வெளியே கிராமத்திலுள்ள பலரும் குடிசை வீடுகள் கட்டிக் குடியிருந்து வந்தனர்.

எங்கள் வீட்டுத்தோட்டத்திலிருந்த வெட்ட வெளியில் இரண்டு வைக்கோற் போர்கள், உரக்குழி, குடில்களைப் பிரித்ததால் மீதமான மரக்குவியல், கோழிக் கூண்டுகள் ஆகியவை இருக்கும்.

எங்களுடைய கோழிக்கூடுகளில் சுமார் பதினைந்து கோழிகள் வளர்த்து வந்தோம்.

அந்தக் கோழிகளை இரவில் மட்டும் கூண்டுகளில் அடைத்து வைப்போம்.

பகலில் அவற்றை எங்கள் தோட்டத்துக்குள் சுதந்திரமாக நடமாட விட்டுவிடுவோம்.

எங்கள் தோட்டத்து வேலிக்கு வெளியே உள்ள குடில்களில் வசித்த கிராமத்தினரும் அவர்களுக்கென கூண்டுகளில் அவர்கள் வீட்டின் கோழிகளை வளர்த்து வந்தனர்.

எங்கிருந்தோ வந்த கீரி ஒன்று நாங்கள் பழைய மரங்களைக் குவித்துச் சேமித்து வைத்திருந்த இடத்தில் தங்கி இரண்டு மூன்று குட்டிகளைப் போட்டிருந்தது.

அதிகாலை நேரங்களில் அந்தக் தாய்க்கீரியும் குட்டிகளும் அந்த மரக்குவியலுக்கு முன்னால் உள்ள வெட்ட வெளியில் விளையாடிக் கொண்டிருக்கும்.

எங்கள் வீட்டிலுள்ளவர்கள் அருகில் சென்றால் கூட எங்களைக் கண்டு அவை பயப்படாது.

நாங்களும் நெருங்கிச் சென்று அவைகளைக் கலவரப்படுத்துவதில்லை.

எங்கள் வீட்டுக் கோழிகள் மட்டும் அந்தக் கீரிக் குடும்பத்தைக் கண்டு பயப்பட்டு ஒதுங்கிப் போய்விடும்.

அந்தக் கீரியும் எங்கள் கோழிகளின் மீது பாய்ந்தோ அல்லது இரவு நேரத்தில் கோழிக் கூண்டுக்குள் நுழைந்து கோழிகளுக்குத் துன்பம் கொடுப்பதோ கிடையாது.

ஆனால் அந்தக் கீரியானது இரவு நேரங்களில் எங்கள் வேலியைத் தாண்டிச் சென்று அங்கே குடியிருக்கும் குடியானவர்கள் வளர்க்கும் கோழிக்கூண்டுகளில் வளர்க்கும் கோழிகளைக் கொன்றுவிடும்.

மிக அருகில் குடியிருக்கும் எங்கள் கோழிகளுக்கு அது எந்தத் தொந்தரவையும் கொடுக்காது.

ஆனால் அந்தக் கீரியானது தினமும் எங்கள் வேலியைத் தாண்டிச் சென்று அங்குள்ள குடிசை வாழ் மக்களின் கோழிகளைப் பிடித்துக் கொன்றுவிடும்.

அந்தக் கீரியின் குட்டிகள் வளர்த்து பெரிதாகும் வரை இதுதான் நடந்து வந்தது. அந்தக் கீரி பிறகு தனது

குட்டிகளைக் கூட்டிக் கொண்டு எங்கேயோ போய்விட்டது,

தங்கள் கோழியைக் கீரி பிடித்துச் சென்றுவிட்டது என்று ஒவ்வொருவரும் புகார் சொல்லும் போதும், அந்தக் கீரியைக் காட்டிக் கொடுக்க எங்களுக்கு மனம் வரவில்லை.

இதைப் போல் தான் பாகிஸ்தானைப் புகலிடமாகக் கொண்ட வன்முறையாளர்கள் எல்லைதாண்டி வந்து இந்திய இராணுவத்தினர் பலரைக் கொன்று குவித்து விட்டனர்.

இந்தத் தீவிரவாதிகள் மீது எவர் நடவடிக்கை எடுப்பது?

நாம் ஏற்கெனவே இராணுவத்தைக் குறித்த கட்டுரை ஒன்றை எழுதியிருந்தோம்.

இராணுவத்தைப் போரிடுவதற்குப் பதிலாக ஆக்கப்பூர்வமானப் பணிகளுக்குப் பயன்படுத்த வேண்டும் என்பதை அந்தக் கட்டுரையில் வலியுறுத்தியிருந்தோம்.

அப்படி நாம் நமது இராணுவத்தைப் பயன்படுத்துவோமானால் இத்தகைய வன்முறையாளர்கள் பெருகிவிடமாட்டார்களா?

- பயங்கரவாதத்தைத் தலைவிரித்தாட வைத்துவிடமாட்டார்களா?

அந்நிலையில் இத்தகைய வன்முறையாளர்களைக் கட்டுப்படுத்துவது யார்?

அல்லது உலகமே இந்த வன்முறையாளர்களின் கோரப்பிடிக்குள் மாட்டிக் கொள்ளத்தான் வேண்டுமா?

ஒரு காலத்தில் இந்தியா என்று எந்த நாடுமே கிடையாது.

குட்டி குட்டி நாடுகள்தான் பல இருந்தன. அவை ஒன்றுக்கொன்று போர்களில் தான் ஈடுபட்டு வந்தன.

அவைகள் அனைத்துமே தனித்தனியாக இராணுவத்தை வைத்துக் கொண்டுதான் இருந்தன.

இப்போது அந்த இராணுவமெல்லாம் என்ன ஆயிற்று.

எல்லாச் சிறிய நாடுகளும் சேர்ந்து இந்தியா என்ற பெயரில் ஒன்றாகியபோது எல்லா இராணுவமும் இந்திய இராணுவமாகிவிட்டது.

இப்போது எல்லா நாடுகளுமே உலகப் பொது அமைப்பின் அங்கமாக அங்கீகரிக்கப்பட்டுவிட்டன.

அதனால் ஒரு நாட்டுடன் அடுத்த நாடுபோர் தொடுக்கும் வகையில் எந்த நாட்டுக்கும் தனிப்பட்ட இராணுவம் தேவையில்லை.

அந்நிலையில் -

வன்மையாளர்களின் வன்முறைகளைக் கட்டுப்பாட்டுகள் கொண்ட வரவேண்டிய கடமையும் உரிமையும் எந்த ஒரு தனிப்பட்ட நாட்டுக்கும் இல்லாமல் போய்விடும்.

அந்த விதக் கடமையும் உரிமையும் சர்வதேசக் கூட்டு அமைப்பான ஐ.நா. சபை அல்லது அதுபோன்ற ஏதாவது ஓர் அமைப்புக்குச் சென்றுவிடும்.

வன்முறைகளின் மூலம் வன்முறையைக் கட்டுப்படுத்தும் உரிமை அத்தகையதொரு அமைப்புக்கு மட்டும் இருப்பதுதான் சரியாக இருக்கும்.

ஆக்கப் பணிகளை உள்நாட்டு இராணுவத்திடமும்

அடக்குமுறைப் பணிகளை சர்வதேச இராணுவத்திடமும்

ஒப்படைப்பதுதான் நமது நாகரிகத்தின் அடுத்த கட்ட வளர்ச்சியாகும்.



# மழைநீர் – குடிநீர்



மழைநீர் மரத்திற்கும் நிலத்திற்கும் மட்டும்தான் உயிர் நீரா? ஏன் நமக்கும் கூடத்தான்.

மழை நீருக்கு மிஞ்சிய சுத்தமான பிராணன் நிறைந்த குடிநீர் உலகத்தில் வேறு எதுவுமே இல்லை.

ஆனால் இதுவரை உயிர் நீரான மழை நீரை குடிநீராக நாம் பயன்படுத்தாமல் விட்டு விட்டோம். இனியாவது மழை நீரின் முக்கியத்துவத்தை உணர்ந்து கொண்டு நமது உடல் நலனில் அக்கறையுடன் செயல்படுவோம்.

"நீர் இன்று அமையாது உலகெனின் யார்யார்க்கும்
வான்இன்று அமையாது ஒழுக்கு"

என்ற வள்ளுவர் வார்த்தைக்கு ஏற்ப, இயற்கையால் வழங்கப்படும் மழை இல்லை என்றால் உலகமே இல்லை. அப்படி பட்ட எந்த மாசுக்களுமற்ற மழை நீரை அருந்தும் போது நமது உடல் ஆரோக்கியம் பெறுவது திண்ணம்.

மழைநீர் சேகரிப்புக்கான மாதிரி வடிவம் ஸ்ரீ பகவத் பவனில் அமைக்கப்பட்டுள்ளது.

இந்த மழைநீர் சேகரிப்பு மாதிரி வடிவத்தை ஸ்ரீ பகவத் பவனுக்கு வரும் அன்பர்களுக்கு விளக்கிக் காட்டினால் அவர்களும் இது போன்ற ஓர் அமைப்பை தங்களது இல்லங்களில் உருவாக்கி தங்களது குடும்ப நலனில் அக்கறையுடன் செயல்பட துண்டுகளாக அமையும் என்று எண்ணி இருக்கிறோம்.

ஸ்ரீ பகவத் பவனுக்கு வரும் அனைவருக்கும் இனி மழை நீரை குடிநீராக வழங்கவும் ஏற்பாடு செய்துள்ளோம்.

இந்த ஒரு நல்ல வேலையை தாமாகவே முன்வந்து செய்துகொடுத்த நமது குடும்ப உறுப்பினர் நைஜீரியாவை சேர்ந்த திரு. **செந்தில்** மற்றும் திரு. **சுஜி** அவர்களுக்கும் உடன் இணைந்து செயல்பட்ட **தங்கவேல் அண்ணா, பரமசிவம்** மற்றும் **மெக்கானிக் பழனிசாமி** ஆகியோருக்கு ஸ்ரீ பகவத் மிஷன் சார்பாக மனமார்ந்த நன்றிகளை தெரிவித்துக்கொள்கிறோம்.

# ஆசிரியர் பகுதி



**K.S. ஜீவமணி**
செல் : 97891 65555

பகவத் பாதையில் பயணிக்கும் அனைவருக்கும் சக பயணியின் வணக்கம்.

"ஞானம் பெறுவது எதற்கு? வாழ்வில் எத்தனையோ அடிப்படைப் பிரச்சினைகளுக்குத் தீர்வு காண முடியாமல் தவித்துக் கொண்டு இருக்கின்ற நிலையில், ஞானத்தின் அவசியம் என்ன? தற்கால சூழலில் நாம் அனைவருமே பல வழிகளிலும் பிரச்சினையைச் சந்தித்துக் கொண்டிருக்கிறோம். குடும்ப உறவுகளில் பிரச்சினை, தொழிலில் பிரச்சினை, பொருளாதாரத்தில் பிரச்சினை இப்படி பல அடிப்படை பிரச்சினைகளை சந்தித்துக் கொண்டிருக்கும் நமக்கு ஞானம் அவசியம்தானா?" - இந்த கேள்வி சாதாரண மனிதர்கள் பலருக்கும் வருவதுண்டு.

ஞானம் என்றால் என்னவென்று தெரியாதவர்கள் பார்வையில் இந்த கேள்வி சரியானதாகவே தோன்றும். ஆனால் உண்மையைத் தெரிந்து கொண்டால் ஞானம் வாழ்க்கைக்கு இன்றியமையாதது என்பது புரிந்து விடும்.

உண்மையில் நாம் எதிர்கொள்ளும் அனைத்து பிரச்சினைகளையும் நாம் அனைவரும் அவரவர் மனதின் வழியாகத்தான் உணருகிறோம். மனம் காட்டும் விதத்தில் தான் நாம் நம் பிரச்சினையை புரிந்து கொள்கிறோம். நமக்கு ஏற்படும் புறப் பிரச்சினை, நம் மனதில் ஒரு துயரத்தையோ வருத்தத்தையோ ஏற்படுத்துகிறது. அது மனதில் ஒரு வலியையும் கொடுக்கிறது. இதனால் நமக்கு ஏற்பட்ட மனத் துயரம் நமக்கு பிடிக்கவில்லை. மனத் துயரத்திலிருந்து விடுபட விரும்புகிறோம்.

இப்போது நாம் இரண்டு வகையான பிரச்சினைகளை எதிர்கொள்ள வேண்டியுள்ளது. ஒன்று புறப் பிரச்சினை மற்றொன்று நம் அகப் பிரச்சினை. புறப் பிரச்சினையை காட்டுவதே மனம்தான். எனவே ஒரு புறப் பிரச்சினை இருக்கும் வரை அகப் பிரச்சினை இருந்து கொண்டு தான் இருக்கும். பல நேரங்களில் புறப் பிரச்சினை தீர்ந்தும் கூட அகப் பிரச்சினை தீர்வதாக இல்லை. நடந்து முடிந்த நிகழ்வை கூட "நமக்கு இப்படி நிகழ்ந்திருக்கக் கூடாது" என்று முடிந்து போன நிகழ்வை நினைத்து வருந்தி கொண்டிருக்கிறோம்.

இப்படி அகப் பிரச்சனையை எதிர்கொள்ள முடியாமல் தான் பலரும் தவறான செயல்களிலும் குற்றங்களிலும் உணர்ச்சி வசப்பட்டு ஈடுபட்டு விடுகின்றனர்.

பல சமூக அவலங்களுக்கு காரணம், அகப் பிரச்சினையை எதிர்கொள்ள முடியாமல் அதற்காக புறத்தில் செயல்படும் தவறான செயலே ஆகும்.

அகப் பிரச்சினையில் இருந்தும் துயரத்தில் இருந்தும் விடுபடுவதே உண்மையான விடுதலை.

அக விடுதலையோடு இயங்கும் மனதிற்கு புறப் பிரச்சினையை எதிர்கொள்வது மிகவும் எளிதானதாகும்.

உண்மையில் **விடுதலை என்பது நமது பிறப்பியல்பே.** பிறப்பிலேயே இயல்பான ஒன்றை அடைய வேண்டிய அவசியம் இல்லை. அதனோடு முரண்படும் அறிவு தெளிவு பெற்றுவிட்டால், விட வேண்டியதை விட்டு விடும். அந்தத் தெளிவைதான் மெய்ஞானம் என்று குறிப்பிடுகிறோம்.

மெய் ஞானம் ஒன்றே வாழ்க்கையில் எல்லா பிரச்சினைகளையும் எளிதாக எதிர்கொள்ள கூடிய வல்லமையை கொடுக்கும்.

எனவேதான் மனித வாழ்க்கையின் அடிப்படைத் தேவையே இந்த ஞானமாக அமைந்துள்ளது. எத்தனை புறப் பிரச்சனைகள் இருந்தாலும் அவற்றை அக விடுதலையோடு அணுகும்போது எளிதில் நம்மால் தீர்வு கண்டுவிட முடியும்.

**ஞானம் பெறுவது என்பது மனிதனின் அதிகப்படியான தகுதி இல்லை. மனிதனாக வாழ்வதற்கு அடிப்படை தகுதியே ஞானத்தை பெறுவதுதான்.**

இதுவரை வந்த ஆன்மிகவாதிகள் ஞானத்தை பிரம்மாண்டமாக்கி எட்டா உயரத்தில் வைத்து அடைவதற்கு அரிதான ஒன்றாக மாற்றி விட்டார்கள். ஸ்ரீ பகவத் ஐயா அவர்களே ஞானத்தை எளிமையாக்கி அனைவரும் எளிதில் பெற்று வாழ்வில் எல்லா வகையிலும் பயன் பெறுமாறு அறிவியல் ரீதியாக அமைத்து கொடுத்து இருக்கிறார்கள்.

அந்த வகையில் ஞான முகாம்களில் பங்கு பெறும் அனைவரும் தீர்க்கமான மனத் தெளிவு பெற்று அக விடுதலையோடு எல்லாப் பிரச்சினைகளையும் எளிதாக எதிர்கொண்டு வாழ்ந்து வருகிறார்கள்.

உலகில் பலர் ஞானத்தை பெறுவதற்காக மன உணர்வுகளோடு போராடி கடும்பாடுபட்டு வருகிறார்கள். அவர்கள் அனைவருக்கும் இதனை தெரிவித்து அவர்களையும் பயன் பெறச் செய்ய வேண்டும் என்பதே நமது நோக்கம்.

இதனை அனைவருக்கும் தெரிவிக்கும் பணியை பயனடைந்தவர்களாகிய நாம்தான் செய்ய வேண்டும். அதற்காக ஞான முகாம் நடைபெறும் விபரங்களை அறிவிக்கும் வகையில் 2.5'x3' என்ற அளவில் பிளக்ஸ் போர்டுகளை நாம் தயாராக வைத்துள்ளோம். வாய்ப்பு உள்ளவர்கள் இதனை பெற்று பலருக்கும் தெரிவிக்கும்படி மக்கள் கூடும் இடத்தில் வைக்கும் பொறுப்பை எடுத்துக்கொண்டு உதவலாம். மேலும் நம்மிடம் உள்ள soft copy யை (JPG file) மெயிலில் பெற்று தங்கள் செலவிலேயே பிரிண்ட் அடித்து வைத்தும் உதவிசெய்யலாம்.

மக்களின் மனத் துயரங்களை போக்க இது மாபெரும் உதவியாக இருக்கும்.

மேலும் தற்போது மார்ச் 7 ஆம் தேதி முதல் 10 ஆம் தேதி வரை சேலத்தில் ஓர் ஞான முகாம் சிறப்பாக நடந்து கொண்டிருக்கிறது.

இதனை தொடர்ந்து மே மாதம் ஒன்றாம் தேதி முதல் ஐந்தாம் தேதி வரை சேலம் ஏற்காட்டில் ஓர் ஞான முகாம் நடைபெற உள்ளது. இதில் அனைவரும் கலந்து கொண்டு பயன்பெற அழைக்கின்றோம். மேலும் ஜூன், ஜூலை மற்றும் ஆகஸ்ட் மாதங்களில் நடைபெறும் ஞான முகாம்களின் விபரங்கள் இம்மாத இதழில் கொடுக்கப்பட்டுள்ளது. தாங்கள் பயன் பெறுவதோடு மற்றவர்களுக்கும் தெரிவித்து அவர்களையும் பயனடையச் செய்யுமாறு அன்புடன் கேட்டுக்கொள்கிறோம்.



# கேள்வி ? பதில்...

## வேட்டை நாயும் விடுதலையும்

**V.A.P. சரவணன்,** சேலம்.
செல் : 99942 05880

**கேள்வி :** ஐயா நான் 82 வயதைக் கடந்தவன். இரண்டாம் வகுப்பு வரை மட்டுமே படித்தவன். தமிழை ஓரளவுக்குக் கூட்டி படிக்க தெரியும். மற்றபடி வேதங்கள், உபநிஷத்துக்கள் போன்றவற்றை என்னால் எழுத்துக் கூட்டிக்கூட படிக்க முடியாது. எனது மகள் உங்களின் ஞானம் முகாம் வகுப்பில் கலந்து கொண்டு இப்பொழுது மிகவும் நன்றாக இருக்கிறாள். ஒவ்வொரு மாதமும் பகவத்பாதை வீட்டிற்கு வந்து கொண்டிருக்கிறது. அதில் வரும் ஜென் கதைகளை விரும்பி படிப்பேன். மற்றபடி உங்களின் எந்த புத்தகத்தையும் நான் படித்ததில்லை. எனக்கு சிலநேரத்தில் அதிகமான மன வேதனை ஏற்படுகிறது. அதிலிருந்து விடுபட முடியாமல் தவிக்கிறேன். இந்த விஷயத்தில் ஓர் ஞானியின் செயல்பாடு எப்படி இருக்கும் என்பதை எளிய கதையின் மூலம் புரிய வைத்தால் மிகவும் உதவியாக இருக்கும். எனக்கு புரியும் படி கதையுடன் சேர்த்து விளக்குங்கள் ஐயா.

**பதில் :** ஒரு ராஜா இருந்தார். அவருடன் வேட்டைக்குச் செல்ல ஒரு பட்டத்து வேட்டைநாய் இருந்தது. அந்த நாய்க்கு எல்லா வகையான சிறப்பு பயிற்சிகளும் கொடுக்கப்பட்டு இருந்தன. போர் வியூகம் அமைத்து எதிரிப்படைகளை வெல்லும் அறிவுக்கூர்மை கூட இருந்தது. ஒரு போர் தளபதியை காட்டிலும் கூடுதலான விசுவாசமும் திறமையும் அந்த நாயிடம் இருந்தது. ராஜா ஓர் அழகிய கண்ணாடி மாளிகையை ராணிக்காக கட்டிக் கொண்டிருந்தார்.

ஒருநாள் திடீரென யாரும் பார்க்காத வேளையில் அந்த வேட்டை நாய் "கண்ணாடி மாளிகைக்குள் என்னதான் இருக்கிறது!" என்பதை பார்க்கும் ஆர்வத்தில் மாளிகையின் உள்ளே புகுந்து கொண்டது. காவலர்கள், உள்ளே வேட்டை நாய் இருப்பது தெரியாமல் கண்ணாடி மாளிகையின் கதவை பூட்டிவிட்டனர். கண்ணாடி மாளிகையின் உள்ளே வேட்டை நாய் மட்டும் தனியாக மாட்டிக்கொண்டது. அது கண்ணாடி மாளிகை என்பதால் வேட்டை நாய் திரும்பிய பக்கமெல்லாம் அதன் உருவம் எல்லா கண்ணாடியிலும் பிரதிபலித்தன.

நாய் தன்னுடைய உருவம் கண்ணாடியில் பிரதிபலிப்பதை பார்த்துவிட்டு அவைகள் அனைத்தும் வேறு நாய்கள் என்று எண்ணிக் கொண்டு அவற்றை எதிர்த்து வேகமாக குரைக்கத் தொடங்கியது.

கண்ணாடி மாளிகையின் உள்ளே இருக்கும் வேட்டை நாயின் ஆக்ரோஷமான குரைப்பு, நூறு



வேட்டை நாய்களின் குரைப்பாக எதிரொலித்தன. இந்த நாயின் பிம்பங்கள் அனைத்தையும் வேறு வேட்டை நாய்கள் என்று எண்ணிக்கொண்டு தொடர்ந்து எதிர்த்து குரைத்துக்கொண்டே அதன் அருகில் வேகமாக சென்றது இந்த வேட்டை நாய்.

கண்ணாடியில் தெரியும் நாயின் பிம்பங்களும் வேகமாக அருகில் வருவதை பார்த்துவிட்டு அவைகளெல்லாம் ஒன்று சேர்ந்துகொண்டு தன்னை தாக்குவதற்கு வருவதாக எண்ணிக்கொண்டது. இதனால் வேட்டை நாய் தன்னுடைய மொத்த சக்தியையும் ஒன்று திரட்டி பிம்பங்களை நோக்கி எதிர்த்து வேகமாக குரைக்கத் தொடங்கியது.

ஆனால் பலன் ஏதும் இல்லை. அவைகளை அடக்க முடியவில்லை. பிம்பங்களும் வேகமாகக் குரைத்தன.

"வியூகம் பல அமைத்து, பல வெற்றிகளைப் பெற்ற தன்னால், இந்த நாய்களை வெல்ல முடியவில்லையே!" என்று தன் மீதே மிகுந்த

கோபமும் வெறுப்பும் கொண்டது, இந்த வேட்டை நாய்.

பிம்பங்களை தொடர்ந்து எதிர்த்து போராடியதால் ஒரு கட்டத்தில் வேட்டைநாய் தன்னுடைய முழு சக்தியையும் இழந்தது.

குரைப்பதற்குகூட சக்தியற்று, தொண்டை வறண்டு காய்ந்து போன நிலையில் "இனிமேல் தன்னால் எந்த முயற்சியும் செய்ய முடியாது. ஒரு வழியும் இல்லை" என்று தோல்வியடைந்து கையறுநிலையில் அப்படியே கண்ணாடி மாளிகையில் சரிந்து விழுந்தது....! பிம்பங்களும் சரிந்து விழுந்தன.



வேட்டை நாய் எல்லா சக்திளையும் இழந்த நிலையில் நிராயுதபாணியாக, எதிரில் இருக்கும் கண்ணாடியில் தெரியும் பிம்பத்தை சற்று நிதானமாக பார்க்க தொடங்கியது. 'தன்னுடைய எல்லா செயல்களையும் எதிரில் இருக்கும் பிம்பங்களும் செய்கின்றன' என்பதை அப்போதுதான் முதன் முறையாக உணர்ந்து கொண்டது வேட்டை நாய்.



தன் அசைவிற்கு தகுந்தாற்போல்தான் பிம்பங்களும் அசைந்து கொண்டிருக்கிறது என்பதை அந்த கணத்தில் தெளிவாக விளங்கிக் கொண்டது.

இப்பொழுது வேட்டைநாய் மீண்டும் ஒரு முறை மெதுவாக குரைத்துப் பார்த்தது. தன் குரைப்பிற்கு தகுந்தாற்போல் கண்ணாடியில் தெரியும் பிம்பங்களும் தன்னை போலவேதான் குரைக்கின்றது என்பதை புரிந்து கொண்டது.

கண்ணாடியில் தெரியும் நூறு பிம்பங்களும் தன்னுடைய பிம்பம் தானே தவிர வேறு ஒன்றும் இல்லை என்பதை நன்கு உணர்ந்து கொண்டது.

இப்பொழுது வேட்டைநாய்க்கு மிக தெளிவாக புரிந்து விட்டது. தனது பிம்பங்களை எதிர்ப்பது என்பது நம்மை நாமே எதிர்த்து கொள்வது தான் என்பது புரிந்து விட்டது. மேலும் பிம்பங்கள் தன்னை எதிர்க்கவில்லை. அவைகள் வெறும் நிழல்கள்தான். நான் தான் பிம்பங்களை எதிர்த்து கொண்டு இருந்திருக்கிறேன் என்பதை உணர்ந்து கொண்டது.

குரைப்பது தேவையற்ற செயல் என்பதையும் புரிந்து கொண்டதால் குரைப்பதில் இருந்து முழுவதுமாக விடுபட்டது வேட்டை நாய், வேட்டை நாயின் செயல்பாடு முன்பிலிருந்து முற்றிலுமாக வேறு ஒரு புதிய பரிமாணத்திற்கு மாறிப்போயிருந்தது.

இந்த தெளிவினால் பிம்பங்களை எதிர்த்துப் போராடிய போராட்டத்திலிருந்து முழுவதுமாக விடுபட்டு அடுத்து என்ன செய்யவேண்டும் என்ற சிந்தனைக்கு வந்தது. கண்ணாடி மாளிகையிலிருந்து வெளியேறுவதற்காக மாளிகையின் வாசற் கதவுக்கு மிக அருகில் வந்து அமைதியாக படுத்துக்கொண்டது.



இந்த கதையை நன்றாக விளங்கிக் கொண்டால் நமது மனதின் மொத்த இயக்கத்தையும் நம்மால் நன்றாக விளங்கிக் கொள்ள முடியும்.

இனி கதையில் வரும் சம்பவத்தோடு நமது மனதின் இயக்கத்தை பொருத்திப் பார்ப்போம்.

வியூகம் பல அமைத்து வெற்றி கொள்ளும் அறிவு கூர்மை கொண்ட வேட்டை நாய் போல்தான் "நாம்".

நமது அறிவு கூர்மையால் புறத்தில் பல காரியங்களை செய்து வெற்றி பெறுகிறோம்.

கண்ணாடி மாளிகையை போன்றுதான் நம் "மனம்". வேட்டை நாயின் உருவம் கண்ணாடியில் பிரதிபலிப்பது போல் நாம் உணரும் உணர்வுகள் அனைத்தும் மனதின் பிரதிபலிப்பே.

நமது மனதில் தோன்றும் எல்லா விதமான உணர்வுகளும் கண்ணாடியில் தெரியும் வேட்டை நாயின் பிம்பங்களை போன்றதே.

அறிவுக்கூர்மையை பயன்படுத்தி பல புற காரியங்களில் வெற்றி கொண்ட நாம் அதே வழியில் மன உணர்வுகளையும் வேதனைகளையும் வென்றுவிடலாம் என்று தவறான முடிவுக்கு வந்துவிடுகிறோம்.

தளபதியை மிஞ்சும் அறிவும் திறமையும் கொண்ட வேட்டை நாயால் கூட கண்ணாடியில் தெரியும் தன்னுடைய பிம்பத்தை எதிர்த்து போராடி வெல்ல முடியவில்லை. எப்படியும் வென்று விடலாம் என்று தப்புக் கணக்கிட்டு தன்னுடைய முழு சக்தியையும் இழந்துவிடுகிறது. இதே போல்தான் நாமும் நமது அறிவைக் கொண்டு மன உணர்வுகளை வென்று விடலாம் என்று தப்பிக் கணக்கிட்டு நம்முடைய முழு சக்தியையும் இழந்து கொண்டிருக்கிறோம். வேட்டை நாய் வியூகம் அமைத்து பல வெற்றிகளை பெற்றதைப் போல நாமும் நம்முடைய தவ முயற்சிகள், பிராணாயாமப் பயிற்சிகள், மன ஒருமைப்பாட்டு பயிற்சிகள் என மனத்தினால் செய்யப்படும் அனைத்து வகையான பயிற்சிகளின் நுணுக்கங்களை கையாண்டாலும் கூட நம்மால் மனதை வெற்றி கொள்ளவே முடியவில்லை.

வேட்டை நாய் தன்னுடைய தோல்வியை உணர்ந்து கொண்ட கையறு நிலையில், கண்ணாடியில் தெரிவது தனது பிம்பம்தான் என்பதை எப்படி புரிந்து கொள்கிறதோ, அப்படிதான் நமது அகத்தில் அறிவின் தோல்வியை உணர்ந்து கொண்டால் மட்டுமே, நமது மனதின் அடிப்படை இயக்கத்தையே புரிந்து கொள்வதோடு புதிய பரிமாணத்திற்கும் -விடுதலைக்கும் வந்துவிடுகிறோம். இப்படி மனதின் இயக்க உண்மைகளை விளங்கிக் கொள்வதைத் தான் புரிதல்-ஞானம் என்று ஸ்ரீ பகவத் ஐயா குறிப்பிடுகிறார்.

நம் அக நிலையில் அறிவின் இயலாமையை புரிந்து கொண்ட நிலையில்தான் மனதின் முழுமையான இயக்கத்தை நம்மால் புரிந்துகொள்ள முடிகிறது. நம்முடைய உணர்வுகள் அனைத்தும் வெறும் நிழல்கள் தான் என்பதை புரிந்து கொண்ட நிலையில், மன உணர்வுகளை எதிர்த்து போராடும் போராட்டம் அனைத்தும் நம் நிழலை எதிர்த்துப் போராடும் போராட்டத்திற்கு சமமான ஒன்றாகும் என்பதை புரிந்து கொள்கிறோம். இப்படி மனதின் செயல்பாட்டினை புரிந்து கொள்ளும் போது மனதின் அடிப்படை செயல்பாட்டிலேயே ஓர் மாற்றம் தாமாக நிகழ்ந்து விடுகிறது.

எப்படி உண்மையை உணர்ந்து கொண்ட வேட்டை நாய் தன்னுடைய பிம்பங்களை எதிர்ப்பதில் இருந்து விடுபட்டு அடுத்து ஆக வேண்டிய செயலுக்கு வந்து விடுகிறதோ அதைபோல நாமும் நமது மன உணர்வுகளை (வேதனைகளை) எதிர்த்துப் போராடுவதில் இருந்து முழுவதுமாக விடுபட்டு புறத்தில் நாம் செய்ய வேண்டிய செயலுக்கான வாய்ப்பு இருக்கும் பகுதியில் நமது முயற்சியை தொடங்கிவிடுகிறோம்.

இதுதான் ஓர் ஞானியின் தெளிவான மனநிலை என்பதை இந்த கதையின் மூலம் தெரிந்துகொள்ளலாம்.


# NOTICE

| | | |
|---|---|---|
| **Place of Publication** | : | Salem |
| **Periodicity of the Publication** | : | Monthly |
| **Printer's Name** | : | **R. Jayavel** |
| **Nationality** | : | Indian |
| **Address** | : | Sree Jayavel Press, 08/11, Gandhi Maidanam, Ammapet, Salem - 636 003. |
| **Publishers Name** | : | **V.A.P. Sharavanan** |
| **Nationality** | : | Indian |
| **Address** | : | 28, Ramalinga Samy Street, Ammapet, Salem - 636 003. |
| **Editor's Name** | : | **K.S. Jeevamani** |
| **Nationality** | : | Indian |
| **Address** | : | 31, Ramalinga Samy Street, Ammapet, Salem - 636 003. |
| **Name and address of individuals** | : | Sri Bagavath Mission, 31, Ramalingasamy Street, Ammapet, Salem-636 003. |

who own the newspaper and partners or shareholders holding more than one percent of the total capital.

I **V.A.P. Saravanan,** Sri Bagavath Mission, 31, Ramalingasamy Street, Ammapet, Salem - 3. hereby declare that the particulars given above are true to the best of my knowledge and belief.

# நிகழ்ச்சி நிழல்கள்



ஸ்ரீ பகவத் ஐயாவின் பிறந்த ஊரான காயாமொழியில் உள்ள அருஞ்சுனை அய்யனார் கோவிலில் ஐயாவுடன் அன்பர்கள்.



பேரன் அபிநவ்வுடன்



ஸ்ரீ பகவத் ஐயா அவர்களின் நூல்களை சென்னை மையத் தலைவர் திரு. இரவிச்சந்திரன் ஐயா அவர்கள் வழங்க Dr. இறையன்பு அவர்கள் பெற்றுக்கொள்கிறார்கள்.



பகவத் பாதையை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்து Bagavath Path ஆக வழங்கிவரும் திருமதி முரளி பிரபா அவர்கள் ஸ்ரீ பகவத் ஐயாவுடன்



தனது காயா மொழி வீட்டின் முன்புறம் அன்பர்களுடன்



எளிமையான திரு உருவம் தளர்வாக அமர்ந்திருந்த தருணம்...



திருச்செந்தூர் கடற்கரையில் ஸ்ரீ பகவத் ஐயா அவர்களுடன் சென்னை மற்றும் திருச்செங்கோடு அன்பர்கள்

# ஸ்ரீ பகவத் ஐயாவின் ஞான முகாம்கள்

| நாள் | விபரம் | செலவு பகிர்வு |
|---|---|---|
| 1.6.2019<br>காலை 11.00 மணிமுதல்<br>2.6.2019<br>மதியம் 3.00 மணிவரை | Stress Management Muham for Government Officials<br>இடம் :<br>ஸ்ரீபகவத் பவன், சேலம். | நன்கொடைகள் வரவேற்கப்படுகின்றன. |
| 5.6.2019<br>காலை 11.00 மணிமுதல்<br>9.6.2019<br>மதியம் 3.00 மணிவரை | **5 நாள் ஞான முகாம்**<br>இடம் :<br>ஸ்ரீபகவத் பவன், சேலம். | ரூ. 4000/-<br>மட்டும். |
| 15.6.2019<br>காலை 11.00 மணிமுதல்<br>16.6.2019<br>மதியம் 3.00 மணிவரை | **ஞான உறுதி முகாம்**<br>(ஏற்கெனவே ஞானமுகாமில் கலந்து கொண்டவர்களுக்கு மட்டும்)<br>இடம் :<br>ஸ்ரீபகவத் பவன், சேலம். | ரூ. 1000/-<br>மட்டும். |
| 6.7.2019<br>காலை 11.00 மணிமுதல்<br>7.7.2019<br>மதியம் 3.00 மணிவரை | **மாணவர்களுக்கான வாழ்வியல் முகாம்**<br>(10, 11, 12 ஆம் வகுப்பு மற்றும் கல்லூரி மாணவர்களுக்கு மட்டும்)<br>இடம் :<br>ஸ்ரீபகவத் பவன், சேலம். | நன்கொடைகள் வரவேற்கப்படுகின்றன. |
| 11.7.2019<br>காலை 11.00 மணிமுதல்<br>14.7.2019<br>மதியம் 3.00 மணிவரை | **4 நாள் ஞான முகாம்**<br>இடம் :<br>ஸ்ரீபகவத் பவன், சேலம். | ரூ. 3000/-<br>மட்டும். |
| 3.8.2019<br>காலை 11.00 மணிமுதல்<br>4.8.2019<br>மதியம் 3.00 மணிவரை | **ஞான உறுதி முகாம்**<br>(ஏற்கெனவே ஞான உறுதி முகாமில் கலந்து கொண்டவர்கள் மட்டும்)<br>இடம் :<br>ஸ்ரீபகவத் பவன், சேலம். | ரூ. 1000/-<br>மட்டும். |

முன்பதிவிற்கு

**ஸ்ரீ பகவத் மிஷன்,** 31, இராமலிங்கசாமி தெரு, அம்மாப்பேட்டை, சேலம்-3.

**79041 18421, 99942 05880, 97891 65555**

# ஜென் கதை

## "குதிரை இல்லாத இடம்"

ஆன்ம சாதகன் ஒருவன் தீவிரமான ஞான தேடுதலில் இருந்தான். 'மனதில் இருந்துதான் அனைத்து பிரச்சினைகளும் தோன்றுகிறது. எனவே மனமற்ற நிலையை (No Mind State) அடைவது ஒன்றே ஆன்ம விடுதலை அடைவதற்கான ஒரே வழி' என முயன்று வந்தான். மனமற்ற (No Mind State) நிலையை அடைவதற்காக பல தியானங்களை இரவு, பகல் பாராமல் தீவிரமாக முயற்சி செய்து வந்தான். காலை கண்விழித்தது முதல் இரவு உறங்கும் வரை மனதில் தோன்றும் உணர்வுகளையும் எண்ணங்களையும் விழிப்புடன் கவனித்து அவற்றில் இருந்து விடுபடுவதற்காக தீவிரமாக முயன்று வந்தான். பல காலம் முயன்றும் அவனுக்கு மனமற்ற நிலையும் ஏற்படவில்லை விடுதலையும் ஏற்படவில்லை. அவனது தீவிர முயற்சியினால் மிகவும் சோர்வடைந்தான்.

வெகு தொலைவில் ஓர் ஞானி இருப்பதாகவும் அவரால் பலர் ஞானத் தெளிவு அடைந்து வருவதாகவும் கேள்விப்பட்டான். அவரை சந்திப்பதற்காக தன் குதிரையின் மீது சவாரி செய்து பயணத்தை மேற்கொண்டான்.

மாலையில் ஞானியை சந்தித்து தன் பிரச்சினையை எடுத்துக் கூறி மனமற்ற நிலையை அடைவதற்கான வழியைக் கேட்டான் சாதகன்.

அவன் பிரச்சினையை கேட்ட ஞானி அவனைப் பார்த்து கலகலவென சிரித்தார்.

அவன், "ஏன் சுவாமி சிரிக்கிறீர்கள்?" என்று கேட்டான்.

ஞானி, "உன் தேடுதலை நினைத்துதான் சிரிக்கிறேனப்பா" என்றார். அவன், "ஏன் சுவாமி? என் தேடுதலில் என்ன தவறு இருக்கிறது?" என்று கேட்டான்.

அவர், "உன் தேடுதலே அர்த்தமற்றதுதானப்பா" என்றார்.

அவன், "சுவாமி எனக்கு ஒன்றும் புரியவில்லையே" என்றான்.

அவர், "என்னை சந்திப்பதற்கு நீ எதன் மீது பயணத்தை மேற்கொண்டாய்?" என்று கேட்டார்.

"குதிரையின் மீது அமர்ந்து சவாரி செய்து வந்தேன்" என்றான் அவன்.

"நீ உன் குதிரை மீது அமர்ந்து கொண்டே குதிரை இல்லாத இடத்தை தேடிக் கொண்டிருப்பது போல் மனமற்ற நிலையை தேடிக் கொண்டிருக்கிறாய். இது என்றுமே முடிவுக்கு வராது" என்றார் ஞானி.

அவன் "சுவாமி சற்று புரியும்படி விளக்குங்கள்" என்றான்.

"யார் மனமற்ற நிலையை அடைய வேண்டும்? விளக்கமாக கூறு" என்றார் ஞானி.

"நான்தான் மனமற்ற நிலையை அடைய வேண்டும்" என்றான் அவன்.

"நான் என்ற உணர்வே மனதினால் உருவான ஒன்று தானே. மனோ மயமாக்கப்பட்ட உணர்வுதான் நான் என்ற உணர்வே ஆகும். மனதினால் உருவான "நான்" என்ற உணர்வின் ஆதாரமே மனம்தான். அப்படி இருக்கையில் அந்த நான் என்ற தன்மையினால் எப்படி மனமற்ற நிலையை எப்படி அடையமுடியும்? அது எப்படி சாத்தியம்" என்றார் ஞானி.

"பிறகு எப்படித்தான் மன பிரச்சினையிலிருந்து விடுபடுவது?" என்றான் சாதகன்.

"மனப் பிரச்சினை என்பமே மாயையப்பா, புற நிகழ்வுகள் அனைத்தையும் நம் மனம் எப்படி பிரதிபலிக்கிறதோ அப்படித்தான் நாம் புரிந்து கொள்கிறோம். புற நிகழ்வுகளை மனம் அப்படியே பிரதிபலிப்பதில்லை. நாம் இவ்வளவு காலம் சேர்த்து வைத்துள்ள நமது நினைவுகளோடும், நமது இயல்புக்குத் தக்கவாறே பிரதிபலிக்கும். அப்படி பிரதிபலிக்கும் பிம்பமான எண்ணத்தோடு போராடும் போராட்டம் என்றும் முடிவுக்கு வராது." என்றார் ஞானி.

சாதகன் "இதற்கு தீர்வு தான் என்ன?" என்றான்.

ஞானி, "மனம் என்பது உன்னுடைய கட்டுப்பாட்டில் இயங்கக் கூடிய ஒன்றா? என்றார்.

"மனம் என்னுடைய கட்டுப்பாட்டில் நிச்சயமாக இயங்காத ஒன்றுதான்" என்றான் சாதகன்.

"நமது கட்டுப்பாட்டில் இல்லாமல் சுதந்திரமாக இயங்கும் மனதின் இயக்கத்தில் நமக்கு எந்த ஒரு வேலையும் இல்லை என்பதை புரிந்து கொள்வது தான் ஞானம்...

"மன பிரச்சனைகள் அனைத்தும் அதன் போக்கில் தாமாக தோன்றி தாமாகவே மறைந்து விடும். புறப்பிரச்சினைதான் உண்மையான பிரச்சினை. அதற்குத்தான் தீர்வு தேவை. உன் சுய முயற்சியினால் அறிவை பயன்படுத்தி செயல்பட வேண்டிய இடம் மட்டும். புறமே நாமாக செயல்பட வேண்டிய இடம்" என்றார் ஞானி.

**"மனமற்ற நிலை என்பது நாம் அடைய முடியாத ஒன்று. புற பிரச்சினைகளுக்கு அறிவை பயன்படுத்தி அதற்கான செயல் செய்வதுதான் சரியான தீர்வு"** என்பதை நன்கு புரிந்து கொண்டு விடை பெற்றான் சாதகன்.

Registration Number of the Registered News Paper TNTAM/2014/57698
Postel Registration Number : TN/WR/SL(E)/22/2018-2020 Posted at Salem HOP 636001. On 10th of every month.

Published by Shri. V.A.P. Sharavanan on behalf of the Sri Bagavath Mission, 31, Ramalingasamy Street, Ammapet, Salem-636 003. Tamilnadu. India.
Printed by Shri. R. Jayavel at Sree Jayavel Press, 08/11, Gandhi Maidanam, Ammapettai, Salem-636 003. Editor : Shri. K.S. Jeevamani Cell : 97891 65555